உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பன்னிரண்டாந் திருமுறை.

---

# விநாயகர்

## திருப்புகழ்ப்போற்றிக்கலிவெண்பா,

விநாயகாநுபூதி,

விநாயகாலங்காரம்,

சிவானந்தலகரி,

தேவிமானதபூஜை, சிற்சத்தியஷ்டகம்,

முருகர் மும்மணிக்கோவை,

முருகேசர்பதிகங்கள்,

சடையீசர்தேவாரப்பதிகம்,

குருஸ்தோத்திரபஞ்சகம் இவைமுதலியன

திருவருட்பிரசாதத்தால்

# சிவானந்தமூர்த்தி

அன்புகூர்ந்துபாடிய

## தோத்திரப்பிரபந்தங்கள்.

சென்னை வண்ணாரப்பேட்டை

பு. சு. கிருஷ்ணசுவாமிபிள்ளையவர்கள்

இலக்ஷ்மீவிலாஸ அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

---

கலியுகாதி-[illegible]—யுவ௵ வைகாசிமீ

# சிவானந்தமூர்த்தி

பாடியருளிய

# சாத்திரப்பிரபந்தங்கள்.

—————※—————

ஸ்ரீராமமூர்த்தி சீவன்முத்தியடைந்த ஞானவாசிட்டசருக்கமிரண்டு

ஆத்மபோதம்

திர்க்திரிசியவிவேகம்

தக்ஷிணாமூர்த்தியஷ்டகம்

சுகாஷ்டகம்

சிவோகபஞ்சகம்

மநீஷாபஞ்சகம்

மோக்ஷசாதனபஞ்சகம்

இவைமுதலியன.

சமஸ்கிர்தமொழியிற் பண்டிதரான மகாநுபாவர்களால் கூறப்பட்ட இவ்வருமையான பிரபந்தங்களை மொழிபெயர்த்துந் தமிழ்க்கவிதையாகப்பாடி சுவாநுபவம்பெற்று உலோகோபகாரமாக அச்சிற்பதிப்பித்து பிரசுரஞ்செய்து கிர்தகிர்த்தியராய் பரமபுருஷார்த்தமடைந்தனர்.

சிவமயம்.

—*—

# விநாயகர்

## திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

### உபாசனாகாண்டம்.

பூமேவு நான்முகனும் புண்டரிகக் கண்ணனன்னல்
தாமேவு முத்தொழிலுஞ் சாதிக்க—மாமேவும் க
ஆதிவி நாயகனை யர்ச்சித்துப் போற்றிசெயத்
தீதில்வரந் தந்த திறம்போற்றி—பூதலத்தை உ
ஆக்க லளித்த லகற்றலெனு முத்தொழிலும்
ஊக்கநெறி தேரு துயங்குங்கால்—மாக்கருணை ங
விஸ்வரூ பங்காட்டி மேவுவித்துத் தன்னுள்ளே
விஸ்வசிர்ட்டி தேற்றும் விறல்போற்றி—விஸ்வத்தை ச
விக்ன கணேசனருள் வேண்டாது தாந்தொடங்கப்
புக்கவினை கோடியதாற் புன்கணுறிஇ—அக்கடவுள் ரு
தாளிணையைப் போற்றவந்து தன்கிரியா ஞானசத்தி
நீளருளா லாற்றுகென்ற நேர்போற்றி—மீளவவர் சா
தன்மகளாய்த் தோன்றத் தவஞ்செய் தவாருளால்
மன்னுசித்தி புத்தியெனு மாநாமம்—துன்னிவர எ
ஆண்டகண நாதற் கருமணஞ்செய் வித்துவந்து
நீண்டதொழில் பெற்ற நிலைபோற்றி—நீண்மால் அ
மதுகை யிடவனொடு மாவசுரர் தம்மால்
சதுரிழந்தவ் வீசனடி சார்ந்து—துதிசெயவும். கூ

தேற்றிக் கணேசன் றிருவருளால் வெல்கவெனப்
போற்றிவலி பெற்ற புகழ்போற்றி—ஆற்றலுள ௧௦

வீமரா ஜன்வனத்தை மேவிவிஸ்வா மித்திரனை
ஆவன்மகப் பேறதனை யாசிக்க—நாவுமுன்முன் ௧௧

வல்லாள மாராஜன் வாய்த்தமகன் றக்கனெனும்
நல்லான்று யோடுபிற நாட்டணைந்து—பொல்லாநோய் ௧௨

தீர விநாயகரைச் சிந்தித்து முக்கலனால்
சீர்பலவும் பெற்றதுரை சீர்போற்றி—நேர்வல்லான் ௧௩

முக்கட் கணேச முதல்வனடி சிந்தித்து
தக்கமுத்தி பெற்ற சதுர்போற்றி—மிக்கவவன் ௧௪

சந்ததியிற் றோன்றச் சதுர்வீமன் கோசிகனால்
முந்தருளைப் போற்றநெடு மொய்ம்புடைய—மைந்தன்ருக்கு ௧௫

மாங்கதனைப் பெற்று வளர்சார்வ பௌமனென
ஆங்குமுடி சூட்டு மருள்போற்றி—தீங்குசெயும் ௧௬

இந்திரற்குக் கோதமனு விட்டபெருஞ் சாபமறச்
சிந்தித்துச் சிந்தா மணியருளால்—முந்துகுறி ௧௭

ஆயிரங்கண் ணாக வமரற்குத் தோன்றவைத்த
நேயவினை யில்லா நெறிபோற்றி—வாய்ந்தருக்கு ௧௮

மாங்கதமா ராஜன் வலியப் புணரவந்த
தேங்குகவி மாமுனிவன் றேவியெனுங்—தீங்கார் ௧௯

முகுந்தையிடு சாபத்தால் மூண்டதொழு நோயைத்
தலைந்தான் கணேசன்றுள் போற்றி—முகுந்தைவரும் ௨௦

இந்திரனைக் கூடி யெழிலார் கிரிச்சமத
மைந்தனைத்தந் தாங்கவனு மாமுனியாய்—முந்துமுனிக் ௨௧

கூட்டத்தில் வாதாடிக் கூறுமிழி வோர்ந்துபிதா
வாட்டமற வோதா மனுவுணர்ந்து—சேட்டுறச் உ௨
சிந்தித்து நீடிருந்த தியானத்திற் றோன்றுபலி
மைந்தன்க ணுறுந்துவா மந்திரத்தை—வந்தித்து உ௩
மூவுலகுந் தான்பணிய முப்புரமும் பெற்றரசு
மேவத்தந் தாண்ட விறல்போற்றி—தேவரெலாம் உ௪
நாரதனைக் கண்டு நவின்றருளே காட்சரத்தை
ஆர்வமொடு தாஞ்செபிக்க வைங்கரனூர்—கோராக உ௫
வந்து குறைதீரும் வகையருள்வோம் நீர்சிவன்பால்
முந்தடைமி னென்ற முறைபோற்றி—நந்துபலி உ௬
வாழ்புரத்திற் சென்று மறையோன் வடிவாகத்
தாழ்வில்லை லாயச்சிந் தாமணியை—வாழவருள் உ௭
என்றலுமே நந்தேனென் றீசனெனும் போர்தொடங்க
நின்றவிம லற்கருளு நேர்போற்றி—வென்றிபலி உ௮
முப்புரத்தோ டுஞ்சென்று மூண்டபோ ரிற்படைகள்
குப்புறவீழ்ந் தோடக் குலைகொலைந்து—செப்பரிய உ௯
ஆற்றலுடை முப்புரமு மாங்கவனு நீறுபடச்
சிற்றநகை செய்த திறம்போற்றி—போற்றிமவான் ௩0
மாமகளாய்த் தோன்றி மதியா வணிசதுர்த்தி
காமருநாள் மாவிரதங் கண்டவுமை—தாமகிழும் ௩௧
அத்தனருள் பெற்றுமண மாங்கடையப் பேறளிக்குஞ்
சித்திகளை சன்மகிமைச் சீர்போற்றி—உத்தமனுங் ௩௨
கார்த்தவமா ராஜனிந்தக் காசினிமுற் றாளுங்கால்
அர்ச்சுனனர் பிருகு வரங்கடையப்—பத்திசெயூஉ ௩௩

தாமரசு பெற்ற தவஞ்சதுர்த்தி மாவிரதம்
ஆமெனக்கேட் டார்று மருள்போற்றி—பூவுலகை ௩௪
ஆண்டநள மாராஜ னுங்கடைந்த கோதமனால்
மாண்டஜென்மங் கௌசிகன்சொல் மாவிரதம்—பூண்டிறைவ
இவ்வரசு பெற்ற இனிப்பகைதீ ரச்சதுர்த்தி
அவ்விரதஞ் செய்வித் தருள்போற்றி—செவ்வியகோற் ௩௬
சந்திராங்க தன்போரிற் சாய்ந்தடைந்த பாதலத்தில்
விந்தைமங்கை மார்தழுவ வேண்டவெறுத்—திந்துமதி ௩௭
நாரதன்கூ றுஞ்சதுர்த்தி நல்விரதம் பூண்டியற்ற
ஊர்பரிமேற் றந்த வுரம்போற்றி—பேர்பெரிய ௩௮
தாருகனாற் றேவர் தளர்ந்தரன்பாற் சென்றுரைக்க
வீரமொப்பில் சண்முகவே ளோத்தரலும்—சீர்முருகர் ௩௯
அன்னா வெனக்கிருஷ்ணை யாற்றருவிற் சிந்திக்க
வண்ணமயி லீந்த வளம்போற்றி—நண்ணிரதி ௪௦
ஈசனைத்தாழ்ந் தேற்ப விவட்குருவாய்ந் தந்தமதன்
ஆசில்சிவ ஞேதியவே காக்ஷரத்தால்—மாசில்கணை ௪௧
நாதனருள் பெற்று நவையகன்று கன்னனன்பால்
நீதின்மக னான திறம்போற்றி—போதமிகும் ௪௨
ஆதிசே டன்செருக்கா லாயிரஞ்சுக் காய்ச்சிரசு
நீதிகனே சன்மனுவை நீள்சதுர்த்தி—மாதினத்தில் ௪௩
அன்பால் விரத மனுஷ்டித் தவன்செபிக்க
மன்னுதர பந்தமா மன்போற்றி—முன்மகவான் ௪௪
தேவவிமா னம்புவிமேற் சேரச்சூ ரசனெனும்
மாவரசன் கண்டுதொழ மாதவத்தால்—தேவர்தொழும் ௪௫

பூர்சுண்டி யைங்கரனைப் போற்றியடை நாற்பதவிச்
சீர்காண வந்ததென்ற சீர்போற்றி—பேர்கிருத சசு

வீரியமா ராஜன் விழைமகப்பே றுங்குதவச்
சேர்பிதுர்க்கள் வேதாவைத் தேருங்கால்—பூருவத்தில் சஎ

நம்மகன்செய் பிரம்மஹத்தி நூற்சங் கடசதுர்த்தி
அம்மனுவாற் செய்கென் றருள்போற்றி—செம்மைப் சஅ

பரத்துவாஜன் வீரியத்தாற் பாரளிந்த செவ்வாய்
வரச்சதுர்த்தி நாளிலே வாய்ந்த—திரத்தினால் சகூ

யார்க்குந்தாம் வேண்டியபே றைங்கரனார் நின்றளிக்க
மாகக்கோ னான வரம்போற்றி—சோகமறும் ருo

நாரதனார் கொண்டுதவு நற்கனியீ சன்முருகற்
காதரவாய்த் தந்த தறிந்தசசி—சில்நகைப் ருக

பாற்சாபம் பெற்றழுங்கிப் பண்பிற் றவம்புரிய
மேற்பரிசு தந்த விறல்போற்றி—கீர்த்தி ருஉ

பெருங்குலப மாராஜன் பீடில்மது சூதன்
வழிமைமகனைடு ஞானகைக்க வட்கி—மறியிடு ருங

சாபத்தை யோர்சபதை தான்மறுசா பங்கொடுக்க
கோபத் தவன்சபித்த கொள்கையினால்—தாபித் ருச

தெருதாய்க் கழுதையா யீனப் புலையாய்
வருதுயரி லைங்கரனார் வாழும்—ஒருகோயில் ருரு

உட்புகுந்தொன் றேடொன் றுடன்றுசுற்ற மூன்றழகு
இட்டதிரு மேனியிலே யென்றதனால்—பட்ட ருசு

அவையபுத்தி பூருவமா யர்ச்சித்த தாகத்
தவர்பூசைக் கொப்பாய்ச் சமைந்தே—இவர்மேவத் ருஎ

## விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

தந்துகண நாதரிவர் தம்மைவிம்மா னத்தேற்றி
முந்துவரச் செய்த முறைபோற்றி—வந்தகண ௫௮

நாதர்மே லோர்வினவ நன்றறுகின் மான்மியத்தை
ஓதுவர்முன் ஞானியம னுற்றளித்த—நீதனலன் ௫௯

தன்னைக் கணேசன் றனைகந்து விழுங்குவெப்பம்
முன்னீக் கியதென் முறைபோற்றி—அன்னதனைக் ௬0

கண்டகவுண் டின்யர்முதற் கற்றுணர்ந்த மாமுனிவர்
மண்டலத்தி னுள்ளபல மாதவரும்—கொண்டரிய ௬௧

மாமலரின் மேலாய் மதித்தர்ச் சனைபுரியக்
காமருபே றீந்தகடைக் கண்போற்றி—மாமிதிலை ௬௨

ஆள்சனக மாராஜ னன்னைவிலை தான்பரமென்
றேளிதமாய்க் கொண்ட விறுமாப்பு—மாள ௬௩

அருள்சேர் விநாயகரோ ரந்தணனாய்ச் சென்று
பொருள்விளங்கத் தேற்றுபுகழ் போற்றி—மருடீர்ந்த ௬௪

அன்பாற் றனைப்போற் றரியதிரி சிரன்பால்
முன்போ யறுகிரந்து மூள்பசியை—இன்பாக ௬௫

மாற்றி யவன்குடிலை மாளிகையாச் செல்வமுறத்
தேற்றிமுத்தி தந்த திறம்போற்றி—சீர்த்திக் ௬௬

கவுண்டின்ய மாமுனிவன் காதலியாள் கேட்பத்
தவத்தூர்வை மான்மியத்தைச் சாற்ற—அவணதிய ௬௭

ஓரறுகைத் தந்தினிறை யும்பர்கோன்பாற் பொலன்கேள்
சீர்பெறநா மென்னத்தான் சென்றுரைக்கத்—தேர்மகவான் ௬௮

நற்குபே ரற்குணர்த்த நாடியவன் றட்டினிடை
பொற்குவையோ டாங்கவனும் புங்கவரும்—உற்றும்

அறுகுவைத்த தட்டங் கசையா தமையால்
மறுவின்முனி யன்பு மதித்து—வருமமரர் ௭௦
மூவரொடு முன்வந்து முத்தனுக்குக் காட்சிதந்து
மேவவர மென்மேனும் வேண்டியவா—நீவதனல் ௭௧
முருந்தோடு மூவிதழாய் மூவேழர்ச் சிப்போர்
மருந்தான வாரிதியே போற்றி—பெரும்பாவி ௭௨
சாம்பனெனு மன்னவன்றன் ருழொழுக்கத் தாழ்குடிகள்
சாம்பப்பல் றிவினைக டாஞ்செய்து—தேம்பி ௭௩
இட்ர்நரகிற் சார்ந்தங் கிருந்துநெடுங் காலம்
புடவியினில் வேடனெனப் போந்தே—அடவியினில் ௭௪
பற்பலரைக் கொன்ற பழியோ ரரக்கனெனத்
தற்றெருட ரவோடிவன்னித் தாருவின்மேல்—உற்றிட்டும் ௭௫
அப்பத் திரங்க ளுதிர்ந்ததன்கீ ழைங்கரன்மேல்
தப்பிவிழ முத்தியரு ளாள்போற்றி—செப்பரிய ௭௬
நீள்வரங்கள் பெற்று நெடுங்கா லுலகமெலாம்
ஆளு மிரணியகசி பன்றன்னை—மீளரியாய் ௭௭
வன்னி விநாயகனை வந்தித்து மாதவனார்
தன்னுகிராற் கீண்ட தகைபோற்றி—பின்னர் ௭௮
வருமிரணி யாக்கதனை வன்கேழ லாய்க்கொன்
றரிய விரோசனன்பா லுற்றுத்—திருவார்ந்த ௭௯
மோகினியாய்த் தோன்றி முதிர்சிரத்தைத் தொட்டழித்து
வாகைவிண்டுக் கீந்த வளம்போற்றி—ஈகையுள ௮௦
மாவலிபாற் சென்றவனை மன்றுமூ வடியிரந்து
பூவுலக முற்றுமிரு பொன்னடியாய்—மேவவொரு ௮௧

# விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

தாளவன்றன் பூமுடிமேற் றங்கவைத்துப் பாதலத்தை
ஆளவைத்த வாம னருள்போற்றி—நீள்புவியாள் அ௨

பேர்பிரிய மன்விரதன் பெற்றகீர்த் திப்பிரபை
பாரியராய்க் கொண்டிணையாள் பாலன்பு—சேர்தலிறைல் அ௩

வஞ்சிக்கப் பட்டயிணை மாய்க்கநினை மூத்தாணன்
நெஞ்சமறை யோனுரைத்த நீள்விரதந்—தஞ்சமெனக் அ௪

கண்டருகு வன்னி கணேசன்று ளர்ச்சிக்கக்
கொண்டவரு ளாலணித்த கோமகனை—மண்டுவிடம் அ௫

கேள்கிரிச்ச மாமுனியாற் கேதமற மாற்றுமய
ஆளருண்மா தங்க னடிபோற்றி—நீள்சீர் அ௬

அவுரவ மாமுனிக்கு மன்னைசுமே தைக்கும்
தவவலியாற் றோன்றுஞ் சமிக்கு—நவமாத் அ௭

தௌம்ய முனிமைந்தன் சவுனகர்தஞ் சீடன்
உவமையில்மந் தாரனுக்கு மொத்து—தவமணஞ்செய் அ௮

தங்கவர்கள் காலமுற வன்பர்புரு சுண்டிமுனி
தொங்குமுகந் தொந்தியையுஞ்சூழ்ந்திவர்கள்—நங்குசெயக் அ௯

கண்டுருத்து நீர்தருவாய்க் கானகத்தில் வாழ்கிரொண
விண்டசா பந்திர்க்க வேண்டியே—தொண்டாஞ் கூ0

சவுனகர்தாம் போற்றத் தயைகூர் கணேசர்
உவர்தருவாய் நின்றவிடத் துற்றுப்—பவமகல கூக

மந்தாரை வன்னி மலர்தளிராற் பூஜைசெய
நந்தா வரமளித்து நன்மைதர—முந்துமனை கூ௨

தன்னுலகஞ் சேரத் தவத்தந்தை யோகத்தால்
அன்னதருக் குள்ளனல மாகியே—மன்னுமகத் கூ௩

இந்திரனை யாதியர்க்கு மீவரவிர்ப் பாகமதால்
நந்தசமி யென்ற நலம்போற்றி—கந்தமலர்ச் ௯௪

சாவித் திரியைவிட்டுச் சாருங்கா யத்திரியை
மேவுமயன் யாகம் விளக்குங்கால்—போதாத ௯௫

சாவித் திரிவெகுண்டு சாபித்த தேவரெலாம்
பாவிப் புனலாய்ப் பரந்தோடத்—தேவியர்கள் ௯௬

வேதாவைக் கண்டு வினவ விநாயகரோ
தாதாவென் றேத்துகெனத் தாமடைந்து—மேதகைய ௯௭

வன்னிமலர் மந்தாரை மாநிழலி லேங்கார்சீர்
பன்னவவர்க் கிந்த பதம்போற்றி—தன்னருள்சேர் ௯௮

கீர்த்தியொடு சேய்கிப் பிரசாதன் காசியெய்திச்
சீர்த்திமணி கர்ணிகையாந் தீர்த்தத்தைப்—போற்றியதில் ௯௯

ஆடிவிஸ்வ நாத ரடியிணைகள் சேவித்து
நாடியருள் துண்டி விநாயகனைப்—பாடி ௧௦௦

ஆசிரிய ரோதுமனு வைங்கார்நா லக்ஷரத்தை
வாசியொடு முச்சரித்து வந்திக்கத்—தேசார் ௧௦௧

கணேசர்திருக் காட்சிபெறக் காத்திருந்தார் நீறை
பணிமுடியைத் தோடுவந்து பன்றாய்—குணாளர்கட் ௧௦௨

இம்மகனை யாயிரமாண் டிவ்வுலகை யாண்டீற்றில்
நம்முலகைச் சார்கவென நற்பாசம்—அம்மகனைக் ௧௦௩

தந்தருளப் பெற்றவர்கள் தந்தையிடஞ் சேர்ந்தவரால்
முந்தாக பெற்ற முறைபோற்றி—இந்தவகை ௧௦௪

முந்துபிர மன்கூற முற்றும் பிதுர்தேவன்
நந்துமக ளுற்ற நனிவணந்து—வந்தவன்போல் ௧௦௫

அப்புத் தகமளித்தே யன்பாற் சதுர்த்தியினில்
முப்புவிபோற் றும்விரத முற்றுகெனச்—செப்பத் ௧௦௬
தலைமேற்கொண் டன்பாசச் சாதித்துப் பெற்ற
குலமகன்கை காலில் குறையால்—புலமுனிவன் ௧௦௭
தெத்தாத் திரயன்வரச் சேவித்தே காக்ஷரத்தை
பத்தியொடு பெற்றதனைப் பல்காலுஞ்—சித்தமுற ௧௦௮
ஐங்கரர்தாட் போற்றவரு ளாயிரங்கை காலிரண்டு
துங்கசர ணைஞ்ஞூறுந் துன்னியே—அங்குகற்ப ௧௦௯
காலமுற்றும் வாழ்ந்து களித்துலகம் போற்றிசெயச்
சீலமுத்தி யீந்த திறம்போற்றி—ஞாலமிசைத் ௧௧௦
தங்குமிந்திர மானஞ் சரித்தோங்க வோர்விரதி
அங்குவரச் சூர்சேன னையுங்கால்—புங்கவிமா ௧௧௧
னம்மொன்று மேவவஃ தவ்வூர்ப் புலைச்சியைக்கொண்
டம்மெனச்செல் காலத்தவ் விந்திரன்றேர்—திம்மென் ௧௧௨
றெழுந்தேக மன்னன்கண் டேதென்னத் தூதர்
தொழுஞ்சதுர்த்தி நைவேத்யந் துய்த்தே—அழுந்தத் ௧௧௩
திருநாம மூன்றுதரஞ் செப்பியபே றென்னப்
பெருமான் விரதத்தைப் பேணி—வருமாசி ௧௧௪
கிருஷ்ண சதுர்த்தியினிற் கேடில்விர தம்பூண்டு
இஷ்டசித்தி பெற்றுநெடு நாளிருந்து—கஷ்ட ௧௧௫
இருவினையு மாய வினையில்விமா னத்தில்
துணைவரொடுஞ் சேர்ந்ததுதி போற்றி—பணைபுயத்துக் ௧௧௬
கார்த்தியவீ ரன்வேட்டை கானகத்தி லாடிவரச்
சீர்த்திசம தக்கினியின் சேவையுறீஇ—ஆர்த்தவன்பால் ௧௧௭

நல்விருந்தூட் டுஞ்சிறப்பை நாடிவரு தேனுவினை
பன்முறைகேட் டியாப் பகைமையினால்—கொல்வதற்கு ௧௧௮

போர்தொடங்கி வெற்றியின்றிப் புக்கவனை வஞ்சனையால்
கோறல்செய்து ரேணுகையைக் கூரம்பால்—ஊறுசெயச் ௧௧௯

சோர்ந்திருந்தாள் ராமனெனுந் தோன்றல்வரக் கண்டழுதாள்
சார்ந்தவினை யோர்ந்துருத்துத் தங்குரவர்—சேர்ந்த ௧௨௦

வழிக்குத் துணையா வருசருமஞ் செய்தான்
விழிக்கிடனாய்ச் சொற்றமனு விண்டு—செழித்தமத ௧௨௧

மாமுகவற் போற்றவருண் மாபரசும் நீள்வயதும்
ஏமுறப்பெற் றோங்குமிசை போற்றி—சோம ௧௨௨

சேகரனார் வாழ்கயிலை சேர்ந்தன்பால் ராவணன்றன்
சோகமறச் செய்தவத்தைச் சூழ்ந்தரனார்—போகமுறத் ௧௨௩

தந்தசிவ லிங்கத்தைத் தன்கைக்கொண் டேகுமுழி
வந்தசிறு மைந்தன்கை வைத்தகல—நந்தன் ௧௨௪

நிலத்திலிடப் பேர்த்தெடுத்தும் நேராது நொந்து
சலத்தோடுங் குட்டத்தா னேங்கிப்—பலத்தால் ௧௨௫

வானி லெடுத்தெறிய வன்மைகுன்றித் தாள்வணங்கித்
தேனனைய தோத்திரங்கள் செப்புதலும்—கூனியகைக் ௧௨௬

கொண்டென் றலையினிடைக் குட்டிக்கொள் ளென்றுசொலி
கண்டுவந்த சித்திக் கதைபோற்றி—பண்டொருகால் ௧௨௭

சூரபத்மன் றன்றுயர் தீயருந் தகன்மகவான்
சீர்காழி யென்னுந் திருப்பதியில்—பேரன்பால் ௧௨௮

நந்தனமொன் றாக்கி நறுமலராற் சங்கரனை
வந்தனைசெய் தேத்தும் வகைதடிக்க—முந்தசுரர் ௧௨௯

## ௧௨ விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

வான்வறக்கச் செய்திட்டும் வந்தடைந்த நாரதனைத்
தான்பணிந்து கேட்பத் தவனுனாயால்—மேன்மைக் ௧௩௦
கணபதியைப் போற்றவவர் காகமதாய்ச் சையக்
குணவகத்தி யன்கரகங் கொட்ட—அணைகங்கை ௧௩௧
சென்றகன்ற காவிரியாய்ச் சேர்ந்து வளம்பெருக்க
நின்ற முனிமுனிய நீள்வடிவை—நன்றவனும் ௧௩௨
கண்டுகுட்டிக் கொள்ளக் கமண்டலத்தைத் தானிறைத்துக்
கொண்டருளும் பெற்ற குணம்போற்றி—தொண்டுசெயும் ௧௩௩
வேதா மனத்தால் விளங்கேழ் புதல்வருக்குள்
மேதாவாங் காசிபனூர் மேன்மையுற—ஓதியருள் ௧௩௪
ஏகா க்ஷரத்தை யினிதுவுசெபித் தாயிரமாண்
டோகார வைங்கரனூ ரோங்குதவம்—வாசாகச் ௧௩௫
செய்யதிவ்ய மேனியொடு சேர்ந்தருளி மூஷிகமேல்
துய்யதிருக் காட்சிதரத் தொண்டரொழுந்—தைய ௧௩௬
அடியே னுயிர்க்குலங்க ளாக்கவென்பா லன்பாய்
நெடியகஸ்ய பந்தனொ னீரும்—முடிமதலை ௧௩௭
ஆகவெனப் போற்ற வருள்செய் தவன்மக்கள்
ஏகமொடேழ் மந்திரத்தை யோதிவர—ஓகையொடும் ௧௩௮
வள்ளலா ராங்கவர்க்கு வாய்ந்தவரந் தந்தருளிப்
பிள்ளையா ரானபெருஞ் சீர்போற்றி—வள்ளலருள் ௧௩௯
நாடியுபா சித்தேத்து நல்லோ ரடைந்தவரம்
தேடியுணர்த்தோ மினியத் தேவர்பிரான்—ஆடல்செயும் ௧௪௦
லீலையவ தாரங்க ளேனோ யுரைக்கவென்னுள்
ஆலயனைப் போற்றி யருள்போற்றி—தாலமிசை ௧௪௧

## லீலாகாண்டம்.

வக்ரதுண்ட மூர்த்தியா வந்தவவ தாரத்துத்
துக்கமற மாற்றியதொல் சீர்போற்றி—தக்கதமிழ் கசஉ
நாட்டா ளபிசித்து நல்வரத்தாற் பெற்றமகன்
வாட்டாக் கணனென்பான் மாதவஞ்செய்—தேட்டார் கசங
நறுங்கொன்றை வேணியனார் நல்லருளாற் குன்றாப்
பெருஞ்செல்வம் நீள்வலியும் பெற்று—வருந்தாமல் கசச
மூவுலகும் வென்று முடிசூடி யாளுங்கால்
மாவனத்துவேட்டைக்கு வந்திளைத்துத்—தேவர்தொழுஞ் கசரு
சீர்கபில மாமுனிவர் சேர்ந்துறை யாசிரமத்தில்
நீர்மையொடும் போய்விருந்து நீடுதவும்—பேர்மருவு கசசா
சிந்தா மணிமகிமை தேர்ந்தினிது கேட்பவர்
மைந்தா நமக்குயிராய் மன்னுமென—நொந்ததனை கசஎ
வன்பாற் கொடுபோக மாமுனிவன் றுன்முனிந்து
முன்னிற்கே லென்றுதவ முற்றிருந்தங்—கன்புசெய கசஅ
ஐங்கரனே மாக்கினியி லாங்குவரக் கண்டொறுத்து
துங்ககணன் வீரமெலாந் தூள்படுத்துத்—தங்குபிதா கசகூ
வந்துதரச் சிந்தா மணிமுனிக்கீந் தாங்கவனும்
தங்களத்தி லிட்டவனே தம்போற்றி—செங்கமல கருO
வேதியனார் கொட்டாவி விட்டதனா லுற்பவித்துப்
போதருசிந் தூரனெனும் பொற்புடைய—தீதார் கருக
நெடியவுடல் பத்துமுடி நீடுமணம் வீச
அடிதொழுவாற் கண்டுவிதி யஞ்சி—முடிவறியான் கருஉ
நல்வரங்கள் தந்து நனிநீ பகைந்தோரை
புல்லிநீ றுக்குகெனப் போகிந்தாச்—செல்ல கருங.

## விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

விடுத்தவனை யேதழுவ மேவப் பயங்கொண்
டடுத்தவிண்டு சொற்கேட் டகன்று—கடுத்தேகி கரு௪

ஈசனிடஞ் சென்றங் கெதிர்ப்பக் கணபதிவந்
தாசகல நீக்கு மருள்போற்றி—பேசவனை கருரு

மாய்ப்பதற்கா வம்பிகைபால் வந்துதிப்ப வஞ்சனையாத்
தாய்வயிற்றிற் சிந்தூரன் சேய்தலையைப்—போயறுக்க கருசு

அன்னசெய லீச னறிந்துமுனந் தான்போற்றும்
மன்னுமகே சன்யானை மாத்தலையைத்—துன்னி கருஎ

வருமைங் கரமூர்த்தி வானவர்கள் போற்றப்
பொருதடர்ந்த சிந்தூரனைப் போக்க—வருஞ்சீர் கருஅ

விராட்டுருவங் கொண்டவன்றன் வீரமெலா மாய்த்துத்
தராதலங்க ளுய்யவவன் றன்னை—நிராகரிக்கப் கருகூ

பற்றிக் குழைத்துப் பருமத் தகத்திலிட்டுச்
குற்றமற முத்திகொடுத் தாய்போற்றி—மற்றுமொரு கசு0

கோனபிகந் தன்செய்யுங் குற்றமுள யாகத்தைத்
தானிந்தித் திந்திரனுற் சார்ந்தனுப்பும்—மாகால கசுக

ரூபி விலக்கி நெடிதுசெயும் விக்கினத்தால்
கோபித்துத் தேவரொடுங் கூர்முனிவர்—தாபித்துத் கசுஉ

தஞ்சமென வைங்கரர்தாட் சார்ந்துதொழத் தாமிரங்கி
அஞ்சலெனக் கூறி யரியதவ—மஞ்சவன் கசுங

சவுபரியா மாமுனிவன் சாருமனோன் மனையை
அவமதியாற் காந்தருவ னன்னைத்—தவமுனிவன் கசு௪

மூஷிகமாய்ப் போதியென முன்னின் றவன்பணியத்
தோஷமற வைங்கரனூர் தொல்பரியாய்—பாச கசுரு

பேர்க்க வெகுண்டு புணர்த்துப்பல மாயையினால்
ஊக்க முனிந்தம்ம னுடன்றருமோர்—சேய்க்குத் கஎஅ
திருப்பெயரி லாபனெனச் செப்பவரம் பெற்றே
உருத்தெழுந்தம் மாயபடை யோட்டித்—தருக்கி கஎகூ
விநாயகர்தாள் போற்றிசெய வேதமயின் மேலாய்த்
தனதுதிறல் காட்டச் சமர்செய்—துனதுமுனம் கஅ0
பாசத்தாற் கட்டிவரப் பாதம் பணியாது
வீசுபடை பற்பலவின் வீறுகெட—வாசிக் கஅக
கமலாசு ரன்மூன்று கண்டமதாய் வீழத்
தமகுலம் விட்டதகை போற்றி—அமைதலத்தில் கஅஉ
பேர்கண் டகநகரிற் பேரரசு செய்திருந்த
சீர்சக்ர பாணியெனச் செப்பரசன்—ஓர்மகப்பே கஅங
றின்றிவனஞ் செல்ல வெழுங்காற் சவுனகர்வந்
தொன்றியுமை ஞாயிறுமா வொள்விரதம்—இன்றுமுதல் கஅச
செய்துவரு கென்றுமனுச் செப்பவவன் செய்துவர
உய்யவுயர் மார்த்தாண்ட னேருருவாய்—வையந் கஅரு
தலைவனைப்போ லுக்கிரையைச் சார்ந்துகரு வீந்தான்
குலவுமனத் தேவியுமை கொண்டு—அலைவின்மனத் கஅசா
தாங்கவனுந் தேவ வனுக்கிரக மென்றுகண்டு
பாங்குடன்சேய் காண்பருவம் பார்த்திருக்க—வீங்குமலை கஅஎ
தன்கருவால் வெப்பஞ் சகியா தருசிந்துநதி
மன்கரையைச் சேர்ந்து மகவளிக்க—அன்னமகள் கஅஅ
செஞ்சடையு முக்கண்ணுஞ் சேர்கரத்திற் சூலமொடு
வெஞ்சக் கரத்தினொடு மேவுதலும்—அஞ்சியவள் கஅகூ

தோழியொடுஞ் சோபமுறச் சூழ்வருணன் றன்கொணர்ந்து
ஆழியர சன்முன்விட வாங்கவனும்—வாழியெனச் கக0
சிந்துவெனும் பேர்தரலும் செல்வமொடு தான்வளர்ந்து
வந்தசுக்ர னோதுமனு வாற்பரனை—வந்தனைசெய் ககக
தாற்றுங் கடுந்தவமீ ராயிரமாண் டாதித்தன்
போற்றுபிம்பத் துட்சிவனைப் பூசிக்க—ஊற்றுமருள் ககஉ
வாரியவன் முன்றோன்றி யாதரித்த நீள்வரந்தந்
தோரிமைப்பிற் செல்ல வுடனெழுந்து—பார்முழுதும் ககங
வானும் பிலனு மலைந்துபோர் விண்டுமுதல்
ஏனையரை வன்சிறையி லிட்டதனால்—தீனையாள் ககச
ஐங்கரனார் முக்கணனொடு மம்மையிடத் தாறுபுயத்
தங்கைமக னாக வவதரித்துப்—பொங்குசிந்து கக௫
மாவவுணன் விட்ட வகைத்திறல்சேர் பல்படையும்
ஓவரச்சிந் திப்பினவ னூற்றிடலும்—கோபித்தே கக௬
ஐயன் மயூரமிசை யாரோகணித்தெழுந்து
வெய்யபடை பற்பலவும் வீசிவிடக்—கையனுடன் ககஎ
தன்படையான் மாற்றிச் சதுரோ டனந்தமுறை
வன்படைகள் மாறிவிட மாயையினாற்—புன்னடைசெய் கக௮
வீறுமுற்று மாற்றி விடுத்தவன் சூலத்தைக்
கூறுசெயத் தன்பாசங் கொண்டுவிட்—டீறியது கக௯
வீரமெல்லாம் போக்கி விரைந்தவனைக் கூறுசெய்யச்
சீரடியிற் றாழுந் திறம்போற்றி—பேர்பெரிய கஉ0
விந்தியதே யத்தில் விளங்குமணி பாதிநகர்
வந்தாண்டு மாகசுரு மன்னவர்கோன்—நந்துமதி கஉக

## ௧௮ விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

மந்திரிய ரெண்மரொடும் வாய்ந்தமனை யையவர்தரும்
மைந்தரொரு நால்வர்தொழ வான்பணிய—விந்தையொடும் ( )

அஷ்ட வயிஸ்வரிய மார்ந்தரசு செய்திடுநாள்
இஷ்ட பிருகுமுனி யீங்கடையத்—திட்டமுறந் ௨0௩

தாள்பணிந்து போற்றித் தகைசான்ற செல்வமொடு
மேன்மைசிவ பத்தி மிகுந்திடவும்—தானவருள் ௨0௪

தோன்றியதற் கென்னைமுனந் தொல்வினையென் றேவினவ
ஊன்றுமுனி யுன்னியுரைசெய்வான்—ஆன்றோனே ௨0௫

சென்மாந் தரம்விதுதிச் செல்வமன்ன ராய்ப்பிறந்து
அன்னதிற்செய் நூறுமக வந்தத்தில்—உன்னியமால் ௨0௬

நாரதனை யேவ நயந்தவன்வேள் விடில்லாவைச்
சீரலவென் றேமறுக்கச் சிற்றமுநீஇ—நீரிங் ௨0௭

கவுணாற கச்சபித்தா னுதலினு லென்னத்
தவனமொடு முள்ளந் தளர்ந்தான்—தவமுடைய ௨0௮

மாதவனு மன்னன் மனைவி சுமேதையொடும்
ஏதமுறு மாதவஞ்செய் தேன்றகருப்—போதருங்கால் ௨0௯

நூமாசு ரன்மடியத் தொல்வாக்கு தோன்றநொந்து
ஏமாறித் தன்படையை யேவுதலும்—தாமேவி ௨௧0

நள்ளிரவின் மாதவனை நன்மனையைப் பள்ளியொடும்
கள்ளமதாய்க் காட்டிற் கரந்துசெல—தெள்ளாருள்சேர் ௨௧௧

ஐங்கரனு ரேவுபடை யாங்கவரைக் காத்தளிக்க
பங்கமுறுங் நூமாசு ரன்பயந்து—தங்கியபின் ௨௧௨

தன்னினத்தாற் சிற்றஞ் சமைந்துபடையெடுக்க
அன்னதுணர் பாலசந்திர னைங்கரனுர்—தன்மகனாய்ப் ௨௧௩

பாலுண்ட வாயிற் பட்டர்வித்த வான்புகையால்
மாலுற்றுத் தூமாசு ரன்மடிய—வேல்பெற்று உகச

மாதவமா ராஜன் மனைவியொடு நாடணைந்து
ஏதமிலா வின்பமிக வீன்றளித்துப்—பூதலத்தை உகரு

ஆண்டு நெடுங் கால மரசுமகற் கீந்தன்பால்
வேண்டுமுத்தி தந்த விறல்போற்றி—ஈண்டுங் உகசு

கணேச ரவதார முப்பாசனு காண்டங்
குணுநி சயமோடுங் கூறும்—பணமுடியார் உகஎ

வாழ்கைலை மால்வனாயின் வண்மையனந் தங்கூறில்
சார்வசந்த காலத்திற் றுமகிழ்ந்தங்—கேழ்புவியும் உகஅ

ஈன்றெடுத்த வம்மையொடு மேந்தையுத்தி யாவனத்தில்
வான்போற்றச் சென்றுலவி வந்திடுகால்—மேன்மைசித்ர உகக

மண்டபத்தைக் கண்டிரண்டு மால்யானை தாம்புணர்ந்து
கண்டசுகந் தாமிருவர் கண்டிருக்க—அண்டர்பிரான் உஉ0

ஐங்கரனூர் தாமகவா யாங்குவரக் கண்டெடுத்துப்
பொங்குபுள காங்கிதமாப் போந்துமனை—தங்கவைத்துப் உஉக

போற்றி யுலகமெலாம் பூசைசெயத் தாமகிழ்ந்து
மாற்றரிய வின்பால்வட் டாடுங்கால்—சீர்த்திருமால் உஉஉ

சான்றுகச் சூள்பேசித் தாய்வெல்லச் சங்கரற்கா
வென்றுரைக்கச் சீறி யீடுசாபங்—கான்றிரியும் உஉந

பாம்பாய்க் கணபதியாற் பாவமறக் காத்திருக்கத்
தேம்பிவருந் தேவர் சிறைநீக்க—ஆம்பண்முகா உஉச

சூரனடல் போக்கத் தொடரசலன் சேண்மேலாய்
வீரப்பூ தப்படைகள் மேவிவரப்—பேரிசங்க உஉரு

மாதி யலைகடல்போ லார்த்தெழும்ப் நாற்றிசையும்
பூதியெழச் சென்றுமதங் காபுரத்தில்—நீதகல ௨௨௫
வஞ்சக் கஜாசூரன் வன்படையைத் தன்படையால்
துஞ்சுவிக்க முன்னவனுற் றூவுபடை—பஞ்சபடத் ௨௨௭
தன்கைக் கதைமழுவாற் சாய்த்திடலும்பின்னுமவன்
முன்சேர் பெருவரத்தின் மொய்ம்புணர்ந்து—துன்னித்தன்
கொம்பொன் றொடித்துவிட்டுக் கொன்றவனைத் தன்கைவர
வம்பனெடு மூஷிகமாய் மாறிவர—எம்பெருமான் ௨௨௯
ஆரோ கணித்தவன்மே லஞ்ஞான நீக்கிவரம்
பேரா தளித்தபெருஞ் சீர்போற்றி—சேர்விண்டு ௨௩0
சாபமொழித் தண்ணலுறை தண்கைலா யஞ்சென்று
கோபுரத்திற் றேவர்கூட்டிக் கொண்டுதொழத்—தீபமென ௨௩௧
வீற்றிருந்தார் விக்னகணபதி தன்மேன்மை தனைப்
போற்றியுல குய்யும் புகழ்போற்றி—ஆற்றன்மிகும் ௨௩௨
அங்கதே யத்தி லதிகாத் திரநகரில்
துங்க ரவுத்திரனுந் தொன்மறையோன்—தங்குமனை ௨௩௩
சாரதையைக் கூடித் தவம்வேள்வி நீடியற்ற
சேர்பலத்தாற் றுமிரண்டு சேய்தரலும்—சீர்மையொடு ௨௩௪
நாமந்தே வாந்த னராந்தகனென் றேகொடுத்து
தாமன்பாற் பாராட்டித் தண்பிறைபோல்—ஏமஞ்செய் ௨௩௫
தாங்குவளர்ந் தோங்க வருங்கலைகள் கற்பித்தே
ஓங்குமுனி நாரதரா லோதுவித்த—பாங்குடைய ௨௩௬
பஞ்சாக் கரமனுவைப் பத்தியுட னேசெபித்தே
அஞ்சா தரனருளை யாதரித்து—விஞ்சுவனம் ௨௩௭

சென்றோர் சிவாலயத்தைச் சேவித்துப் பூஜித்து
வன்றழலின் மத்தியிலே வானோக்கி—என்றூழிற் ௨௩௮

றோன்றுசிவ பிம்பத்தைத் தோத்திரஞ்செய் தேநோக்கி
ஊன்றுபதி னாயிரமாண் டுற்றதவஞ்—சான்றோன ௨௩௯

எம்பெருமான் முன்றோன்றி யீறில்வரந் தந்தளிக்க
தம்பெருமை யாமேல் தருக்கெய்தி—உம்பரையும் ௨௪௦

இம்பரையு மற்றிருவ ரீட்டழித்துத் தம்வலியால்
தம்மரசு மூன்றுலகிற் றோங்க—வெம்பினராய் ௨௪௧

இந்திரன்வே தாமுதலோ ரீட்டழிந்து தாமொதுங்க
நொந்ததிதி காசிபரை நோக்குதலும்—சிந்தித்தே ௨௪௨

ஐங்கரனார் தம்மருளா லன்றியவு ணேசர்வலி
பங்கமுறச் செய்பவரிப் பாரிலென்று—எங்கள்பிரான் ௨௪௩

தன்மனுவை யோதித் தவம்புரியத் தோன்றியவர்
நன்மகவாய் வந்து நனிவளர—மன்னுந் ௨௪௪

தருமந் தழைத்துத் தவம்வேள்வி யோங்க
அருமந்த மாமுனிவ ரண்மித்—திருமைந்தன் ௨௪௫

மேன்மைதனைப் போற்ற விறல்சேர் நராந்தகனார்
கான்மழையால் ரத்தவெள்ளங் காட்டியே—வான்மீது ௨௪௬

தூமகே துத்தோன்றச் சூழ்ந்திட்டக்கண் டோடிடக்கத்
தாமருண்டு சோதிடர்சொல் சம்பவமோர்ந்—தேம ௨௪௭

விளைசைதனை யேவ விழுங்கியவள் செல்லப்
புளைசெய் துடல்கிழித்துப் போந்து—மறையுந்தன் ௨௪௮

துந்துபியாஞ் சூரர் சுகவடிவாய் வந்திட்டும்
பந்தெனப்பாய்ந் தாங்கவற்றைப் பற்றியே—முந்துவிலோ ௨௪௯

யாடுதல்போற் கொன்று ரவர்பதத்தைச் சேருதலும்
நீடுமொரு வாவியன்னை நீர்குடையத்—தேடுதல்போல் உ௫0
ஆங்கிறங்கித் தானோ ரடல்சேர் கராமுதுகில்
ஓங்கிவினை யாடிதுறை யுற்றிடலும்—சோங்கியதோர் உ௫௧
சித்ரனெனுங் காந்தருவச் செல்வன்றான் முன்வந்து
அத்தனைத்தாழ்ந் தாங்கவன்சா பந்திர—முத்திகொடுத் உ௫உ
தக்கா சிபாரிடத்தி லாகாஊ தும்புருவென்
மிக்கதவர் வந்தேற்றும் விக்கிரகம்—ஒக்கமறைத் உ௫௩
தாரிவற்றைக் கேட்டதந்தைக் காவென்றுவாய்திறக்க
சீரியவத் தேவர்கட்கும் சேருலகை—நேர்கண்டு உ௫௪
எந்தையடி தாழ்ந்தேற்ற வீறிலவற் றைக்கொடுத்து
முந்துமைந்தாண் டாக விதிமுறையே—தந்தை உ௫௫
உபநயனஞ் செய்விப்பா னோர்ந்துரைக்கத் தேவர்
தவமுனிவர் யாவர்களுஞ் சார்ந்த—சபைநடுவில் உ௫௬
பிங்கலனை யாதியைந்து பேரவுண ரந்தணராய்
அங்ஙனடைந் தக்ஷதையா மம்புவிட—எங்கள் உ௫௭
பெருந்தவத்தால் வந்தபிள்ளை பெற்றியறிந் தைந்து
திருந்த க்ஷதைகொடவர்ச் செற்றார்—வருந்தேவர் உ௫அ
காணிக்கை யாகக் கவின்சேர் பிறைகமுதல்
பூணுமணி பற்பலவும் போரோறும்—காணும் உ௫௯
அவரவருக் குள்ள வரும்பொருள்பேர் தந்தார்
இவர்மகிழ்ந்து கொண்டா ரினிதாய்—அவரவர்கள் உ௬0
சென்றதற்பின் றேவேந் திரனொருவன் சேர்செருக்கால்
நன்றியின்றி வாயுவொடு நற்கனலை—அன்றேவ உ௬௧

நின்றபிரான் புன்னகையால் நீக்கிவிஸ்வ ரூபமெடுத்
தன்னமக வானையுமோ ரண்டத்தில்—துன்னவிட் ௨௬௨
மீண்டுவரச் சக்தியின்றி வீறடங்கிப் போற்றிசெய
ஆண்டருளு மொப்பி லருள்போற்றி—வேண்டியவா ௨௬௩
பொற்பட்டும் பல்பணியும் பூண்டுபெட்டை தாங்கிமிகு
மற்பொருவி லாச்சிங்க வாகனமேல்—பற்பலபதஞ் ௨௬௪
சென்று விளையாடி வந்துசேருங் காற்காசிநகர்
வென்றிமன்னன்செய்யும் விவாகத்துக்—கொன்றன்பால் ௨௬௫
காசிப்ரை வேண்டத்தன் காதலனைக் கூட்டுதலும்
நேசமொடு தேரின்மிசை நேர்ந்தேறி—ஆசகலச் ௨௬௬
செல்போதிற் றூமாக்ஷன் செய்தவத்தாற் சோதிதரும்
வல்லமைசேரொற்படையை வன்கையால்—ஒல்லெனக்கொண்
டாங்கவன்மேல் வீசி யருஞ்சிரத்தைக் கொய்திடலும்
ஏங்கியவன் மக்க ளெதிர்த்துவர—ஓங்கவரைக் ௨௬௮
கண்டுபெரு மூச்சுவிடக் கட்டோ டவர்மாண்டு
மண்டுநராந் தன்கொலுச்செய் மண்டபத்தில்—விண்டிருளக் ( )
கண்டுவெருண் டோடிக் கனல்போற் கொதித்தைஞ்ஞூ
றென்றொகைய சூரர்தமை யேவுதலும்—மண்டியவர் ௭௦
ஆதவனை மேகம்போ லாய்கிரதஞ் சூழ்ந்திடலும்
நாதன்கோ பத்தெழுந்த நாதத்தால்—சேதமுறீஇ ௨௭௧
மாண்டவகை கேட்டு மதித்தரிய மாயைவல்ல
ஆண்டகைய சூரர்தமை யாங்கனுப்ப—ஈண்டிநகர் ௨௭௨
எல்லைதனிற் றேர்செல்ல வெண்ணிலலங் காரமொடு
பல்லோர்முன் வந்து பணிந்துவரச்—செல்காலை ௨௭௩

வஞ்சமறை யோர்வடிவாய் வாய்ந்தபெருங் காற்றுசி
விஞ்சு மிடாவுணர் வீறடக்கி—மஞ்சுதவழ் உஎச
மாளிகையுட் செல்கால் மறித்தகூ டாசுரனை
நாளிகே ராஸ்த்திரத்தா னன்றகற்றி—கேளிரொடும் உஎரு
மாமனையுட் புக்கு மலரணைமேல் வீற்றிருந்தார்
காமருல கேத்தக் கருணைசெயூஉ—மாமலரோன் உஎசு
மன்னன் புரோகிதனு மாதரும நந்தனென்பான்
இன்மொழிகள் பேசி யெமதிறைக்குத்—தன்மகளாஞ் உஎஎ
சித்திபுத்தி தன்னைத் திருக்கல்யா ணஞ்செய்ய
பத்திமனைக் கேகப் பகையசுரன்—புத்தியின்றி உஎஅ
விட்டவிருகழுதை வேழமொன்றன் வீறடக்கி
பட்டழிக்கத் தூமாக்ஷன் பன்னிவந்தங்—கிட்டவிடம் உஎகூ
மாற்றியபின் றங்கிவதுவைச் சடங்கியற்றி
போற்றி மன்னன் கோயிலிடைப் புக்கிருந்தார்—சீற்றமொடு()
வந்தவொரு மூன்றவுணர் மாருதமாய் வெங்கனலாய்
அந்தகர் தன்னை யதஞ்செய்ய—நொந்தகலும் உஅக
வாயிலிடைட் வேங்கையாய் வந்துதடுக் கின்றதனைப்
போயரசற் குற்றுப் புகன்றிடலும்—நாயகனார் உஅஉ
தன்கைக் கமண்டலநீர் தன்னாற் றணித்தொழித்தே
அந்தகனைக் காத்த வருள்போற்றி—பன்னியொடு உஅ௩
மன்செய் பணிகொண்டு வாய்ந்தபுரு சுண்டிமுனி
தன்னன் புரிந்த நிவேதனத்தை—முன்னன்னாத் உஅச
கூட்டியுணக் கண்டரசன் கூட்டிவந்து தன்மனையில்
ஊட்டவங்க ணுண்ட வொருலீலை—காட்டியபின் உஅரு

சோதிட்நூற் கூறுஞ் சுரனுக்குச் சூட்டுமுத்துச்
சீதவட்டம் போட்டொழித்த சீர்போற்றி—போதொருநாள் ( )

கூபனொடு கந்தனெனக் கூறு மிரண்டவுணர்
மாதவனை யாய்க்கிணருய் வந்திருக்க—ஆதவன்போல் ௨௮௭

உள்ளிறங்கிக் கூப முழக்கித் தவனைதனை
துள்ளிவிழக் கொன்று தொடர்ந்துவருந்—தள்ளரிய ௨௮௮

துங்காசு ரன்னம்பா சூரனந்த காசுரன்
மங்கா தவனை மறைத்திருளாய்க்—கங்கைநகர் ௨௮௯

சூழ்ந்தமலை யாகித் தொடர்மேக மாய்ப்பொழிய
வீழ்ந்தவெள்ள மேன்மேல் விரிந்திடலுஞ்—சூழ்ந்தங் ௨௯0

கருளு மகோற்கடமா வண்ண லாற்புள்ளாய்
வருசிறகான் மேகத்தை வாட்டி—இருண்மலையைத் ௨௯௧

தூளாக்கி நெற்றிவிழித் தோன்றுகனல் காரிருளை
மீளா தடக்கிவெள்ள மீறடக்க—மாளா ௨௯௨

தவர்வேட ணுய்வலையா யாலமர மாகி
இவரை வலைப்படுத்த வெண்ணிக்—கவல்போகில் ௨௯௩

புள்ளான வெம்பெருமான் போந்தவரைக் கைக்கொண்டு
தள்ளாத் தவலோகந் தான்பார்ந்தே—எள்ளி ௨௯௪

விடுத்திடலும் பெற்ற பிரமனைதன் வீட்டில்
பொடித்துவிழக் கண்டு புலம்பி—விடுத்தவொற்றர் ௨௯௫

வந்துபதங் காசுரன் மாய்ந்தசெயல் தாமுரைக்க
வெந்துமிகச் சீறி வெகுண்டெழுந்து—தந்திரமாக் ௨௯௬

கொல்வே னெனவகிநிக் கோலமொடு சென்றண்ணல்
செல்காசி யிற்கண்டு சிற்றுண்டி—நல்கி ௨௯௭

விடத்தாற் கொலைகுறிக்க மீண்டதனுல் மாண்டாள்
தொடுத்தடுத்தோர் தீமை துலைய—அடுத்தாகர் ௨௯௮
உள்ளாரு மன்னவனு மொப்பி லதிசயங்கொண்
டுள்ளா தரத்துதிக ளோதியபின்—பிள்ளைதனைத் ௨௯௯
தத்தமனை வந்தன்னர் தாமருந்த வேண்டுதலும்
அத்த னதற்கிசைந்தாங் காங்கிருந்து—பத்திமிகும் ௩௦௦
சுக்கிலற்குந் தேவிக்குஞ் சூழ்ந்தசன காதியர்க்கும்
ஒக்கவுண்டி யார்க்கு மருளுதவும்—அக்கால் ௩௦௧
நராந்தகனு லேவுமிரு நஞ்சகலன் சூலன்
வராநகரில் வந்து மகோற்கடனை—விராவியவர் ௩௦௨
தான்பணியக்கூறுஞ்சமாதானச்சேதிகொண்டு
வாளரசற்குற்றுவகுத்துரைக்கத்—தோள்வலியால் ௩௦௩
சீற்றமொடுசேனு சமுத்திரங்கள் சூழ்ந்துவர
ஆற்றலொடுங் காசிநக ரண்மிவந்து—மாற்றரிய ௩௦௪
தீமைகளைச் செய்து செருக்களத்தில் வந்தடைய
சேமமுறு காசிநகர்ச் சீர்நிருபன்—தாமுந்தன் ௩௦௫
நீள்படைகள் சாகரம்போ னேர்ந்துதனைச்சூழ்ந்துவர
தாள்வலியாற்சென் றிரண்டுதானைகளும்—வான்முதலாம் ௩௦௬
பல்படைகள்வீசிப் பரவியுத்தஞ் செய்போது
வெல்படையாற் காசியர்மன்வெற்றிபெற—நில்லென்ன ௩௦௭
சீறி நராந்தகனே தேர்நூழி லாடலொடும்
வீறியரசன் புதல்வர் மேலமச்சர்—போரடக்கிக் ௩௦௮
காவல்செய் தான்செய்தி கடிதொற்றர் சென்றுரைக்க
தேவியண்ணல்தாள்போற்றத் தேர்ந்தெழுந்து—பாவியின்மேற்

சென்ற முகத்துதித்த சீற்றத்தாற் பூதகணம்
ஒன்றுபத்து நூறு யிரந்தலையும்—வென்றிகரம் ௩௧௦
அவ்விரட்டி தாங்கு மரும்படையு நீள்வடிவும்
செவ்வியவான் முட்டித் திகழ்ந்தடியை—அவ்வியமில் ௩௧௧
அன்பாற் பணிந்தங் கதிபன் குரூரனென்பான்
வன்பசியை நீக்க வருந்துதலும்—முன்பார் ௩௧௨
நராந்தன்பெரும்படையை நன்றருந்திக்காசி
வராமன்னன்மக்களொடு மற்றோர்—இராமுன்பு ௩௧௩
கூட்டிவரு கென்றலுமே கொள்ளைகொண்டென் டார்ப்பரித்து
வாட்டி னராந்தகன்கை வன்படைகள்—ஈட்டமெலாம் ௩௧௪
உண்டதற்பின்பாசுபதமோச்சுமுன்னமன்மகனைக்
கொண்டுகுழுவோடுவந்து கோமானைத்—தெண்டனிட் ௩௧௫
புன்னகைசெய்தன்பாற் புகழ்ந்திருப்பவீழ்ந்தெழுந்த
அன்னநராந் தன்மாயை யாலனந்தம்—வன்மை ௩௧௬
உகாந்தமழையா யுருத்தவட்வாக்கினியாய்
அகாதவளியா யெழுந்தங்காற்றும்—தகாதபல ௩௧௭
மாயையெலாம் போக்க மறிந்தெழுந்த வங்கத்தைப்
போயொழிய வொன்றொன்றுப் போக்கியபின்—காயமொடும்
சீறியெழக்கண்டு சினந்துபிரு கம்வளைத்துத்
தேறிவிடும்பாணஞ்சிரமறுக்க—மாறுதலை ௩௧௯
பெற்றுவரநோக்கிப்பெரிதுவிஸ்வரூபமொடும்
அற்றவனைத்தாருகிராலாங்கழிக்க—சுற்றத்தார் ௩௨௦
வாழ்மனையில்வீழ்ந்தருண்டவன்றலைகள்கண்டெடுத்து
மாழ்கியதேவாந்தனொடும் வந்தடைந்தங்—காழிபெண ௩௨௧

வீழ்ந்துபுரண் டேகதறி மேற்பகையை வெல்லவெனச்
சூழ்படைவெள்ளத்தொகுதி துன்றிவர—பாழிநெடுந் ௯௨௨
தோட்டிணவால் வெம்போர் தொடங்க மகோற்கடர்தாம்
வாட்படைக ளோவகைவிடுத்துக்—காட்டெரிபோல் ௯௨௩
மாய்த்திடவு மாயா வலியா னெடும்படைகள்
பேய்த்தேர்கள் போலப் பெருகிவரச்—சாய்த்தொழிக்க ௯௨௪
எம்பெருமான் றேவியரோ டென்று சித்திதேவிதரும்
கம்புமஷ்ட மாசித்தி நற்படைகள்—சம்பவித்துப் ௯௨௫
பொங்கி யெழுந்தேற்றூர் பொருப்படையெல்லா மழிக்க
தங்கியதேவாந் தன்றனு வெடுத்துச்—சிங்கமெனச் ௯௨௬
சீறிநெடும் போர்செய்யத் தேர்புத்தி தேவிதரும்
வீறுபெரும் பவுத்த விஸ்வனெழுந்—தீறுசெயத் ௯௨௭
தேவாந்தகனை யெடுத்தே தின்றுமென் றிடவும்
ஓவாத சூக்க வுருவுகொடு—தாவிப்போய் ௯௨௮
தந்தையைச் சேர்ந்தாங்கோர் தனிமகனுஞ்செய் தாங்குறித்த
அந்தமிலாக் கார்பரிமே லாங்கூர்ந்து—முந்துவா ௯௨௯
எந்தைமகோற் கடர்கண் டேற்றவன்செய் வெம்போரைச்
சிந்தியவன் பெற்றவரந் தீர்ந்தொழியத்—தந்திமுகம் ௯௩௦
பெற்றெழுந்தோர் கொம்பாற் பெரிதவனைக் குத்தியதால்
பற்றறவீழ்ந் தாரொளியாய்ப் பாதமுற—மற்றதற்பின் ௯௩௧
காசிநகர் சென்றிருந்து காசினிமுன் றும்போற்ற
ஆசிலருள் செய்தங் கரசன்மகன்—தேசுபெற ௯௩௨
மாமணத்தைச் செய்வித்து வண்மைமிகும் மன்னனெறிக்
காமர்பரி வாரமொடெங் காசியன்பால்—தாமணுகி ௯௩௩

வேண்டினர்க்கு வேண்டுவரம் மேன்மேலுமீந்தளித்தே
ஆண்டோர் பொற்கோயிலமர்ந்தருளி—சேண்டயங்கும் ககச

ஆனந்த மாப்வனத் தார்ந்தடிய ருண்ணிறைந்து
மோனந்ததும்பு முதல்போற்றி—மேனந்து ககரு

கைவர்த்ததேயத்திற் காண்பன்மகமென்னுஞ்
சைவத்திருநகரிற் சாரவுணன்—உய்பிரம ககசு

சூரனென்பான் சுத்தவிர்த்தி தோன்றச் சிவனருளால்
பாரதவநீணாள் பயின்றிடலும்—வீரவரன் ககஎ

வேண்டுவரமியாது வினவென் றருள்செய்ய
ஆண்டவனைநோக்கி யடியேன்கைத்—தீண்டினர்தஞ் ககஅ

சென்னியொடு நீறாகச் செய்யும்வரந் தாவென்ன
அன்னதளித் தேனென் றவர்தலையை—முன்றொட்டுக் ககக

காண்பலெனச் செல்லக் கரந்தருளினார் தொடர்ந்தே
ஆண்மையொடுந் தேடி யலையுங்கால்—மாண்டிருமால் கஉ0

தீயவனைமாய்க்கத் தெளிந்தெழில்சேர் மோகினியாய்
ஆயவன்பாற்செல்ல வவன்மருண்டு—நாயகியே கஉக

அன்புசெய வேண்டுமென வாதரித்துப் பின்றொடர
வன்புடனென் போனடன மாடிலனே—அன்புசெய்வேன் ( )

என்றலுமே முன்னின் றெதிர்நிழல்போற் கைநொடித்து
நின்றாடிநீள்கைதலை வைத்திடலும்—ஒன்றுடலம் கஉ௩

நீறாகக்கண்டு நெடுமால் முகுந்தைசெல
ஆராமகன்கேட் டருந்தவஞ்செய்—தோரா கஉ௪

யிரவருடஞ்செல்ல விறைவர்முன்பு தோன்றி
இரவரங்களீந்து சிவசத்தி—வரமகளை கஉ௫

யன்றியெவராலு மழிவிலையென் றேயருள
நன்றிதெனத் தன்னரசு நாட்டியே—வென்றியொடும் ௩௪௫
மூவுலகுமாண்டு முடிக்கவிண்டு வாதியர்கள்
தாவிவந்துகாசிநகர் தாமடையப்—பாவிவந்து ௩௪௬
போர்தொடங்கப் புங்கவர்கள் போந்தடைந்தார் கேதாரம்
சேர்ந்தது ராசன்காசி நின்றிருந்து—பார்முழுதும் ௩௪௭
ஆண்டனர்த்தஞ் செய்ய வமரருமை தாள்பணிந்து
வேண்டவரு டுண்டி விநாயகர்தாம்—காண்டகைய ௩௪௮
ஐந்துமுகம் பத்துகர மார்ந்துசிங்க வாகனமேல்
விந்தையொடும் விளங்கி வீறுபகை—அந்தமுற ௩௪௯
வில்வாண் முதற்படையால் வெம்போர் தொடர்ந்திட்ட
வெல்படையற் றேயவுணன் வீறுகெட—நல்வரந்தை ௩௫௦
உன்னியண்ண லன்றோ னுயர்முடிமேற் றானன்றி
மன்னியகா சிப்பதிமேல் வாய்தலிலே—இன்னலறப் ௩௫௧
பாதகங்க ணீக்கிப் பரனருளைச் சிந்தித்து
நீதகல வைத்த திறம்போற்றி—ஆதியிலே ௩௫௨
பாற்பகற்பந் தன்னிற் பகர்சுவா யம்புமனு
மேற்பதத்தைச்சேர விரிந்தசகம்—கார்ப்பிரிந்து ௩௫௩
காடாக வேதாக வன்றுதிரி புஞ்சயனைத்
தேடியரசீந்து திவோ தாசனென—நாடிவைக்க ௩௫௪
செங்கோல் செலுத்திச் செழித்தோங்கத் தேவர்களை
அங்காசிநீங்க வகற்றுதலும்—புங்கவர்கள் ௩௫௫
துண்டி விநாயகருஞ் சூழ்ந்ததிரு மாலும்வந்து
விண்டவிகற்பாகமத்தைமெய்க்கொண்டு—தொண்டுசெய ௩௫௬

ஆங்கவனை முத்தியுல காளவைத்த நீள்கருணை
தேங்குடுண்டி நாயகர்தஞ் சீர்போற்றி—ஆங்கொருகால் ௩௫௭
சத்தியலோ கத்தமரர் சார்ந்த பெருஞ்சபையில்
வித்தகவே தாவனைமேல் வீற்றிருக்கப்—பத்திசெயும் ௩௫௮
மைந்தருக்குண் மேலா மரீசிமுனி தாள்பணிந்தே
எந்தைபுரி முத்தொழிற்கு மீசரெவர்—அந்தமறி ௩௫௯
யெனுணரக் கூறியரு ளென்றுதொழ வும்பிரமன்
ஆனமுத லச்சிந்தித் தாங்குரைப்பான்—மானமைந்த ௩௬0
தேருந்து யானுந் திருமாலு முன்னொருகால்
மாருய்ப் பரம்பொருளென் றேமதித்தங்—காருத ௩௬௧
போர்தொடங்கிச் செய்யப் புராந்தகரிப் பூதரமாய்
நேருருக்கொண் டெங்கண்முனை நின்றிட்டும்—பாரவொரு ( )
கேழலுருவாய் விண்டு கீண்டடியைத் தேடிநிற்கச்
சூழ்முடியை யன்னமதாய்ச் சூழ்ந்துழல்யான்—மாழ்குதலும் ( )
ஆரணமுந் தேடற் கரியபிரான் முன்னின்று
பூரணராய்த் தோன்றியருள் புரிந்து—காரணராய் ௩௬௪
எம்மையளித் தித்தொழிலு மீந்துமிறைந் துள்ளிருந்து
மும்மையினுங் காக்கு முதலாகி—அம்மவுயர் ௩௬௫
தேவதே வாகுஞ் சிவமாப் பரஞ்சுடராம்
ஓவாவிநாயகரொன் றேதுமறை—ஆவா ௩௬௬
எமக்கு மகேசன்முன் னிசைத்த வநுபூதி
உமக்குரைக்கக் கேளென் றுணர்த்த—சமப்புதல்வன் ௩௬௭
மானதவா விக்கரையின் மன்னுவே றாயிரமாண்
டானதவஞ் செய்ய வருள்சுரந்து—வானமிசை ௩௬௮

 விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

மாமணிப்பூண் மூஷிகமா வாகனத்தின் மேற்றோன்றி
காமர்மழு வேந்துங் கணபதியார்—தாமணுகி ௱௬௯

வேண்டுவர மியாது விளம்பென்ன வீழ்ந்திறைஞ்சி
ஆண்டவனே நின்னன் பளித்தருளி—காண்டகைய ௱௭௦

மூவுலகுங் காவல்செய முப்பத்து முக்கோடி
தேவர்களென்னாணை திறம்பாமல்—பாவனைசெய் ௱௭௧

தென்னைப்பூ சிக்க வினியகுண மக்கள்பெற
நின்னதுவாமத்துமையுநேர்மகளாய்—மன்னியென்பால் ௱௭௨

யானளிக்க நீர்வேட் டளித்திடவும் வேண்டுமென
மேனயந்து கேட்ப வியந்தருளித்—தானகல ௱௭௩

தந்தைதனைத் தானினைக்கச் சார்ந்தவரைத் தான்பணிந்து
விந்தைநக ரொன்று விதித்திடென்னச்—சந்தமுற ௱௭௪

வாய்ந்தபிர மாநகரில் வைகிச்சுராசுரர்கள்
ஆய்ந்துபுடை சூழ வரசியற்றி—ஏய்ந்திடுநாள் ௱௭௫

வேதாதருந்தேவ வல்லியெனு மெல்லியலை
ஆதரவாய்வேட்டா யிரமகவைத்—தீதகல ௱௭௬

மேலானபாக்கியத்தை மேவியவன் வாழ்ந்திடுநாள்
மாலானுமைகொள் மனத்தருக்கி—ஞாலே ௱௭௭

உல்கத்தை யீச னெக்கெவம்மை போற்றப்
புலனுற் றளித்துமைநீ போந்து—நலமாந் ௱௭௮

தவஞ்செய் மரீசிமுனி தன்மகளா கென்னப்
புவியமுனை மாநதியிற் பூத்து—நலமணைமேல் ௱௭௯

சங்கவடிவாகித் தவமுனிவன் சார்ந்தெடுப்ப
நங்கையுரு வல்லையென் னாமமொடு—தங்கியே ௱௮௦

அன்பாற் றவஞ்செய்ய வார்ந்தமயில் வாகனமேல்
முன்பாக் கணேசனென முன்னின்றே—இன்பமுற ௩௮௧

மாமணஞ்செய் தாரங்கு வந்ததிருமாலளித்த
மாமகளா மோதை பிரமோதை—காமர் ௩௮௨

சுமதை சவுந்தரியே சுத்தமனோ ரம்மை
சமமங்கலைகே சினிகாந்தை—அமரும் ௩௮௩

சுமத்திமையே நந்தினியே சூழ்காசை காமதை
அமைத்தபெண்கள் பன்னிருவ ரன்பால்—தமைத்தொழலும் ()

அங்கீ கரித்தவரை யாதரித்துச் செந்திருமால்
தங்கித் தசவவதா ரஞ்செய்யப்—புங்கவில்வ ௩௮௫

ரூபம் பெறத்தனதா முண்மைஞா னம்பெறவும்
தாபமறக் காக்குஞ் சதுரளித்தே—யூபமிகும் ௩௮௬

மாமன் மரீசிமுனி மற்றுமுள தேவர்க்கும்
காமர்வர மீந்து கருணைசெய்து—சேம ௩௮௭

மணித்தீப மென்னுந்தன் வானுலக மெய்தி
அணைந்தவெழில் வல்லபையு மன்பால்—மணைந்தபெண்கள் ()

சூழ்ந்து பணிசெய்யச் சுகோதயாய்த் தானிறைந்து
ஏழ்புவியி லாங்காங் கினிதிருந்து—வாழும் ௩௮௯

பிரமாதி தேவர் பெருமுனிவர் சித்தர்
தராதலமான் மன்னர்மற்றோர் தாமும்—பரவி ௩௯௦

உபாசனைசெய் தின்று முவந்த வரம்பெற்று
சுபாசுபமாம்வாசனைபோற் றொன்றி—அபாயமற ௩௯௧

## ௧௪ விநாயகர் திருப்புகழ்போற்றிக்கலிவெண்பா.

முத்தி விரும்பினர்க்கு முத்தி கொடுத்தினிது
சித்தி விரும்பினர்கள் சித்திபெற—வித்தகர்தாம் ௧௯௨

பற்பல்மதத் தோர்கள்செயும் பாவனைபோற் பேறுதவி
அற்புதமா மூத்தொழிற்கு மாகிப்ராய்—நித்தமுத்த ௧௯௩

ஆதியந்த மில்லாத வானந்த மூர்த்தியாய்
ஓதவரு மோங்காரத் துட்பொருளாய்—நீதி ௧௯௪

நிறைபரமாய் நின்ற விநாயகர்நீள் காதை
மறைபுகன்று முற்று மகிமை—முறையுணர்ந்த ௧௯௫

சங்கரனைப் போற்றிச் சதுமுகனார் தாம்வினவ
அங்கவற்றி லோர்பாக மாராய்ந்து—துங்க ௧௯௬

அவதாரம் பன்னிரண்டு மற்புதமர் லீலை
தவர்களுபா சித்தகதை தாமும்—பவமகல ௧௯௭

ஓதியவாறே வேதா வுற்றுணர்ந்து வியாதனுக்குப்
போதனைசெய் தாங்கவனும் புத்திமிகும்—மாதவருள் ௧௯௮

அன்பன் பிருகுமுனிக் காதரவாற் கூறவவர்
மன்சோம காந்தனெனு மன்னனுக்குப்—பன்னவவன் ௧௯௯

வெவ்வினைக டீர்ந்து விநாயகர்சா லோகத்தில்
எவ்வமறத் தேவிமக னென்றதினை—ஒவ்வவடைந் ௨௦௦

திறில் சுகமடைந்தா ரென்றபுரா ணங்கேட்டோர்
கூறினர்க்கு முத்திசித்திக் கும். ௨௦௧

திருச்சிற்றம்பலம்.

சம்பூரணம்.

உ

சிவமயம்.

—*—

# காசித்தலத்தில் சத்தவாவரணத்தில் எழுந்தருளியிருக்கின்ற ஐம்பத்தாறுவிநாயகமூர்த்தங்களின் திருநாமங்கள்.

முதலாவரணத்தில்.

துண்டிவிநாயகர், துர்க்கைவிநாயகர், அர்க்கவிநாயகர், பிரசன்னவிநாயகர், வீமவிநாயகர், சந்திவிநாயகர். ஆ—சு.

இரண்டாமாவரணத்தில்.

சித்ரூபவிநாயகர், லம்போதரவிநாயகர், கூடதந்தவிநாயகர், சலாடவிநாயகர், குலப்பிரியவிநாயகர், சதுர்த்திவிநாயகர், பஞ்சமிவிநாயகர், முண்டகவிநாயகர், சமுசிகவிநாயகர், விடங்கவிநாயகர், நிஜவிநாயகர், இராஜபுத்திரவிநாயகர், பிரணவவிநாயகர், உபதாபவிநாயகர். ஆ—கச.

மூன்றாமாவரணத்தில்.

வக்ரதுண்டவிநாயகர், ஏகதந்தவிநாயகர், திரிமுகவிநாயகர், பஞ்சமுகவிநாயகர், ஏரம்பவிநாயகர், விக்கினராஜவிநாயகர், வரதவிநாயகர், மோதகப்பிரியவிநாயகர். ஆ—அ.

நான்காமாவரணத்தில்.

எகோபயப்பிரதவிநாயகர், சிங்கமுகவிநாயகர், கூணிதாக்ஷவிநாயகர், க்ஷிப்ரப்பிரசாதவிநாயகர், சிந்தாமணிவிநாயகர், தந்தவக்ரவிநாயகர், பிசண்டிலவிநாயகர், உத்தண்டமுண்டவிநாயகர், ஆ—அ.

## விநாயகமூர்த்தங்களின் திருநாமங்கள்.

ஐந்தாமாவரணத்தில்.

மணிகர்ணவிநாயகர், ஆசரசிருட்டிவிநாயகர், கஜகர்ண விநாயகர், கண்டாவிநாயகர், சுமங்களவிநாயகர், மந்திரவிநாயகர், ஆ—சு.

ஆறுமாவரணத்தில்.

மோதகவிநாயகர், சுமுகவிநாயகர், துன்முகவிநாயகர், கணப்திவிநாயகர், அபரவிநாயகர், ஆக்கினைவிநாயகர், ஞானவிநாயகர், அவிமுத்திவிநாயகர். ஆ—அ.

ஏழாமாவரணத்தில்.

ஆமோதவிநாயகர், பாகீரதவிநாயகர், அரிச்சந்திரவிநாயகர், கபர்த்திவிநாயகர், பெந்துவிநாயகர், சனகவிநாயகர். ஆ—சு.

இத்திருநாமங்களை எழுதினவர்களும், உச்சரித்தவர்களும், கூறக்கேட்டவர்களும், விநாயகமூர்த்தி மகத்துவங்களைக்கேட்டுணர்ந்த மேலானபலனைப் பெறுவார்கள், தீவினையினைத் துணித்து மேலானசுகத்தையடைவார்கள்.

---

## அவதாரலீலைகளில் இன்னுங்கூறப்பட்ட சிறப்புநாமங்கள்.

சித்திபுத்திவிநாயகர்
மயூரேசவிநாயகர்
தூமகேதுவிநாயகர்
கணபதிவிநாயகர்
இலக்கவிநாயகர்
சர்வசித்திவிநாயகர்
மந்தாரவிநாயகர்
காலானலப்பிரசவிநாயகர்
வல்லபைவிநாயகர்
பாலசந்திரவிநாயகர்
கணேசவிநாயகர்
மகோற்கடவிநாயகர்
சித்திவிநாயகர்
வன்னிவிநாயகர்
விண்டுவிநாயகர்

## சகஸ்த்ரநாம சமானநாமங்கள்.

கணபதி
ஏரம்பன்
மோகன்
தரணிதரன்
கலாதரன்
கசியபந்தன்
மஹாகணபதி
க்ஷிப்ரப்பிரசாதன்
ஆசாபூரகன்
வரதன்
ஜயன்
அமுதமந்திரன்
இலக்ககணபதி
வாச்சிகதன்
பீஜவிநாயகன்
மங்கலவிநாயகன்
உடன்டிவிநாயகன்
பிரியகணபதி
சித்திவிநாயகன்
சிந்தாமணிவிநாயகன்
மகோற்கடவிநாயகன்

ஆ. உக.

---

## த்வாதசநாமார்ச்சனை.

ஓம் சுமுகாயநம:
ஓம் ஏகதந்தாயநம:
ஓம் கபிலாயநம:
ஓம் கஜகர்ணகாயநம:
ஓம் லம்போதராயநம:
ஓம் விகடாயநம:
ஓம் விக்னராஜாயநம:
ஓம் கணாதிபாயநம:
ஓம் தூமகேதவேநம:
ஓம் கணாத்யக்ஷாயநம:
ஓம் பாலசந்த்ராயநம:
ஓம் கஜானனாயநம:

ஆ. திருநாமம்-கஉ.

---

## விநாயகர்பூஜை.

ஓம் கணேசாயநம:
ஓம் விக்னராஜாயநம:
ஓம் ஆகுவாஹனாயநம:
ஓம் ஏரம்பாயநம:
பாதௌபூஜையாமி
ஜானுநீபூஜையாமி
ஊரூம்பூஜையாமி
கடிம்பூஜையாமி

| | |
|---|---|
| ஓம் தேவதேவாயநம: | நாபிம்பூஜையாமி |
| ஓம் லம்போதராயநம: | உதரம்பூஜையாமி |
| ஓம் கணநாயகாயநம: | ஹ்ர்தயம்பூஜையாமி |
| ஓம் ஸ்தூலகண்டாயநம: | கண்டம்பூஜையாமி |
| ஓம் ஸ்கந்தாக்ரஜாயநம: | ஸ்கந்தௌபூஜையாமி |
| ஓம் சதுர்ப்புஜாயநம: | புஜௌபூஜையாமி |
| ஓம் ப்ரசுஹஸ்தாயநம: | ஹஸ்தான்பூஜையாமி |
| ஓம் கஜவக்த்ராயநம: | வக்த்ரம்பூஜையாமி |
| ஓம் விக்கினஹந்திரேயநம: | நேத்திரோபூஜையாமி |
| ஓம் சூர்ப்பகர்ணயநம: | கர்ணௌபூஜையாமி |
| ஓம் ஏகதந்தாயநம: | தந்தம்பூஜையாமி |
| ஓம் குமாரகுருவேநம: | சிரம்பூஜையாமி |
| ஓம் சர்வேஸ்வராயநம: | சர்வாங்காநிபூஜையாமி |

என்று பாதம், முழந்தாள், தொடை, நிதம்பம், நாபி, வயிறு, இர்தயம், கண்டம், கழுத்தடி, தோள், உள்ளங்கை, நாசி, கண், காது, தந்தம், சிரம், சர்வாங்கம் என்னும் ௧௭ - இடங்களில் அங்கபூஜைசெய்க.

---

## அறுகு-வன்னி-மந்தாரை-முதலிய புஷ்பார்ச்சனை.

| | |
|---|---|
| ஓம் சுமுகாயநம: | சாதிபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் ஏகதந்தாயநம: | சாவந்திகாபுஷ்பம் சமர்ப்பயாமி |
| ஓம் கபிலாயநம: | மல்லிகாபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் கஜகர்ணயநம: | சம்பகிபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் லம்போதராயநம: | கல்லாரபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் விகடாயநம: | கேதகிபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் விக்னநாசினேநம: | வகுளபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் விநாயகாயநம: | சதபத்ரபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் தூமகேதுவேநம: | புன்னாகபுஷ்பம்சமர்ப்பயாமி |

| | |
|---|---|
| ஓம் கஜாத்யக்ஷாயநம: | துத்தாரபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் பாலசந்த்ராயநம: | மாலதிபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் பத்னிஹீனாயநம: | விஷ்ணுக்கிராந்தபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் உமாபுத்ராயநம: | கிரிகர்ணிகாபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் கஜானனாயநம: | நாகபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் ஈசபுத்ராயநம: | மந்தாரபுஷ்பம்சர்ப்பயாமி |
| ஓம் சர்வசித்திப்பிரதாயகாயநம: | கோவிதாரபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் மூஷிகவாஹனாயநம: | துருமோற்பலபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் குமாரகுரவேநம: | ரக்தபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் தீர்க்கதுண்டாயநம: | அர்க்கபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் இபவக்த்ராயநம: | முனிபுஷ்பம்சமர்ப்பயாமி |
| ஓம் ஸங்கடநாசினேநம: | ஏகவிம்சதிபுஷ்பம்சமர்ப்பயாமி. |

## பூஜைக்குரிய பத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| சிறுசண்பகம் | நாயுருவி | விஷ்ணுக்கிராந்தி |
| கரசராங்கணி | சிறுவழுதி | மாதுளை |
| வில்வம் | வன்னி | மந்தாரை |
| அறுகு | அலரி | மருவு |
| இந்தை | மூங்கில் | சாதிமல்லி |
| ஊமத்தை | வெள்ளெருக்கு | வெண்ணொச்சி |
| துளசி | மருதம் | ஆக ௨௧-பத்திரம். |

## பூஜைக்குரிய புஷ்பங்கள்.

| | | |
|---|---|---|
| சிறுசண்பகம் | தாமரை | மந்தாரை |
| சாமந்தி | புன்னை | குரா |
| மல்லிகை | ஊமத்தை | கொங்கு |
| சம்பங்கி | முல்லை | செம்பிரத்தம் |
| செங்குவளை | விஷ்ணுக்கிராந்தி | வெள்ளெருக்கு |
| தாழை | வெள்ளைக்காகணம் | அகத்தி |
| மகிழம் | நாகை | ஆக ௨௧-புஷ்பம். |

முற்றிற்று.

உ

சிவமயம்.

# மயிலாசல முருகேசர் பதிகம்.



## காப்பு.

மணிநாணுஞ்செவ்வேள்மயிலமுருகேசற்
கணிநாணுஞ்சொற்றாரணியப்—பணிசூடும்
ஈசன்றரித்தபிறையேற்போமெனமுத்துக்
காசுதவுகோட்டிபமேகாப்பு.

## நூல்.

பொன்னினிற்பதித்தநவமணிக்கலன்கள்பூண்டுசெம்பொற்பட்டாமணிந்து, மின்னெனவிளங்குந்தெய்வயானையையும்மென்மையார்வள்ளியம்மையையும், தன்னிருமருங்குமமர்ந்திடமயின்மேற்சண்முகாகாட்சிதந்தருள்வாய், அன்னையம்பிகைகிறனைநிந்துமுன்னுதவும்அயிலனேமயிலநாயகனே. க

சேணிடைவலாரியாதியர்க்கபயஞ்செய்தவர்பகைகெடவழித்து, மாணுயர்தமிழ்ச்சொற்கீரனுக்கருளிமற்றவன்புனைபடையாறும், பூணதாமென்னப்பொலிவுறப்புனைந்துபுன்மையேன்வினைகடீர்த்தருளும், யாணர்நற்சோதியென்னவேயொளிரும்அயிலனேமயிலநாயகனே. உ

உலகெலாமிருகைமுடிமிசைகூப்பியொருமுருகாவெனவோதி
பலமலவுட்டலிற்பிறந்துழலாதுபாதுகாத்தருளெனப்போற்றி
நிலைவளரரியசடாக்ஷரப்பொருளைநினைவுறச்செபித்தலர்கொண்டு
அலர்புனைபதத்திலஞ்சலித்தவருள்செய் அயிலனேமயிலநாயகனே.

உருகுறேன்மனங்கண்ணீர்சொரியேனின் றிருசிறுநாவி
னாற்போற்றேன், இருவினைக்காடுமும்மலச்சேறுமெரிந்தொழிந்
திடத்தவம்புரியேன், பருவமிலெற்குன்பதப்பொடிதரிலெம்பரா
பரன்கண்டுளமகிழ, அருளினுன்மெய்மையன்பனாகிடுவேன் அயி
லனேமயிலநாயகனே. ௫

உளமலர்கமலத்தவிசிடைநினதுவொப்பிகலற்புதவுருவை
தளர்வறவமைத்துவாய்மைநீராட்டிசாந்தமாதூசணியணிந்து
அள்விலாநினதுபுகழ்மலர்மாலையாசையிற்புனைந்தினிதணிந்து
அளியினாலன்பையருத்துதலென்றோ அயிலனேமயிலநாயகனே

எண்ணுதற்கரியபுகழணிமேனி யெழிற்றனையுரைத்திடற்கெ
ளிதோ, கண்ணினுக்கமுதமூட்டுமேயெனதுகவலைதீர்ந்தற்புதம
டையத், தன்னொளியுருவாத்தங்கியமணியேதருமன்வந்தெனைய
ழைத்திடும்போ, தண்ணனின்பதமேயன்றிவேறுண்டோ அயி
லனேமயிலநாயகனே. ௬

வார்தருசுருட்பூங்கமலமேனிகராம் வதனமும்வளர்தனச்
செப்பும், பார்வையிற்றோன்றுவிடையுமோரரவப் படவரவல்கு
லுங்கண்டு, சார்தருபிறவித்துயர்க்கடற்படாது தாட்டுணையென்
றுநீதருவாய், ஆர்கலியுளைந்தங்கடிபணிந்தேத்தும் அயிலனேமயி
லநாயகனே. ௭

பூதலமதனின்மிடிபிணியுற்றுப்பொய்யினைமெய்யெனக்கூறி
ஓதுதற்கரியதுயருளைந்திருதாளொண்புகழோதிலனென்றோ
சீதரற்கருளியன்பொடும்வினவச் சிறந்தபஞ்சாக்கரப்பொருளின்
ஆதியாம்பயனையரற்குரைத்தருளும் அயிலனேமயிலநாயகனே.

என்றனைப்போலுஞானமில்வேட னெதிர்ப்படுகதலிமாவ
னத்தில், மன்னிவந்தவனைநந்தையெம்பெருமான்மலரடிக்கன்

பனுக்கிலேயோ, பன்னுதற்கரியவென்மயலகற்றில்பவமகன்று ன்னடிசேரும், அன்னவர்போற்றற்கெஞ்சியபுகழாம் அயிலனே மயிலநாயகனே. ௯

பிறவிவார்கடலைக்கடந்தனதிருதாட்பெரும்புணைபற்றியா னந்தத், துறைபெறுமுத்திவாரிதிசார்ந்துதுளைந்தியான்சுகிப்பது மென்னுள், மறைநெறியுணர்ந்தமாதவர்போற்ற வானவர்தினந் தொழுதேத்த, அறிவினின்றினிதுள்ளானந்தமுதவும் அயிலனே மயிலநாயகனே. ௧௦

மயிலாசலமுருகேசர்பதிக முற்றிற்று.

---

உ

சிவமயம்.

குணமங்கலம்

# முருகேசர்திருப்பதிகம்.

---

காப்பு.

குணமங்கலம்பதியாக்கொள்ளுங்குணேசர்
குணமங்கலவருளைக்கூடி—துணைவர்
முருகர்திருப்புகழைமுன்பதிகம்பாடித்
திருவருளாற்செல்வமடைவாம்.

நூல்.

உலகமெல்லாந்தொழுதேத்தவும்பர்குறைதீர்ந்துய்ந்திடவும்
திலகநுதலாற்சிவனளித்தசெவ்வியார்ந்தசண்முகனே
இலகுமண்டமாயிரத்தெட்டிறையாயிடர்செய்சூரபத்மன்
குலவுமயில்சேவற்கொடியாங்குணமங்கலம்வாழ்பெருமானே ௧

தேவர்சிறையைமீட்டருளச்செவ்வேலணிந்துதுணைவருடன்
காவல்சேர்ந்தமகேந்திரத்திற்கடியவரசாள்சூரபத்மன்
மாவலஞ்சேர்தாருகனும்வயங்குபானுகோபன்முதல்
ஓவிலவுணர்தமைக்கடிந்திங்குயர்மங்கலம்வாழ்பெருமானே. ௨

தேவேந்திரன்செய்மாதவத்தாற்றிகழ்ந்ததெய்வயானைதனை
மூவர்முதலாமுப்பத்துமுக்கோடியராந்தேவர்தொழ
ஆவலோடுமணம்புரிந்தங்கரியதணிகைப்பதியமர்ந்து
சேவற்கொடிசேர்மயின்மீதுதிகழ்மங்கலம்வாழ்பெருமானே. ௩

முனிபுங்கவர்செய்மாதவத்தால்முன்னமானின்வயிற்றுதித்தங்
கினியவேட்ராஜனிடத்திருந்தவள்ளியம்மையையும்
கனியுமருளாற்காந்தருவக்கலியாணஞ்செய்துளமகிழ்ந்தாய்
பனிமென்மலர்தூயுலகேத்திப்பணிமங்கலம்வாழ்பெருமானே. ௪

பொதியமலையிலகத்தியனூர்புரிந்ததவத்தான்மனதிரங்கி
விதியின்மெஞ்ஞானந்தன்னைவிளங்கவுபதேசித்தருளி
துதிசெய்யருணகிரிநாதர்தொடருமனந்தந்தொண்டருக்கும்
கதிசேர்முத்திக்கரைகாட்டுங்கனமங்கலம்வாழ்பெருமானே. ௫

சங்கத்தலைவனற்கீரன்றனக்கங்குண்டாமிடர்தீரத்
துங்கமுருகாற்றுப்படையைச்சொல்லித்துதிக்கவருள்சுரந்து
பொங்குமவுணன்சிறைநீக்கிப்பொருவில்கைலாயஞ்சேர்த்தே
அங்ஙன்முத்திகொடுத்தருளுமருமங்கலம்வாழ்பெருமானே. ௬

உலப்பிலருள்சேருன்னடிகட்குரியபுகழைப்போற்றிசெய்வார்
நிலத்திற்பெரியவரம்பெறுதல்நிகரோநீயேமுன்னின்றால்
பலத்திற்பெரியதவம்புரிந்துபழுதின்முத்திசேர்வார்கள்
நலத்திற்பெரியவளமல்குநன்மங்கலம்வாழ்பெருமானே. ௭

வினையால்விளைந்தபலபிணியுமிக்கவிடஞ்சேர்கொடும்பிணியும்
நினையார்வாதிபௌதிகத்தால்நேர்ந்தபிணியுந்தெய்வத்தால், இனை
யவருத்தும்பிணியனைத்துமிகலும்வறுமைப்பிணிதனையும், தனை
யாதரித்தோர்க்கொழித்தருளுந்தவமங்கலம்வாழ்பெருமானே. அ

குடும்பந்தன்னில்வருப்கையுங்கொடியவஞ்சர்செயும்பகையும்
இடுமாவரசர்மேன்மேலுமிறையைச்சுமத்தும்பெரும்பகையும்
படுமாவனலால்வெள்ளத்தாற்படரும்பகையுங்கள்ளர்களால்
அடுமாபகையுநீக்கியருளமர்மங்கலம்வாழ்பெருமானே. கூ

குணமார்காராமணிநகரைக்கூறுங்குணமங்கலமென்ன
இணையார்பெயரும்வழங்கிவரவினிதாய்த்தேவாசனத்திருந்து
துணைமாமுகவர்கைலாயர்சூழவிருந்திங்கருள்செய்யும்
பணைமாமயிலூர்பெருமானேபணிவேனுளம்வாழ்பெருமானே. க0

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

குணமங்கலங் காராமணிநகர்

# முருகேசர்தியானதோத்திரபஞ்சகம்.

சீரார்கருணைபொழியாறுதிருமாமுகமுஞ்செழுங்கரங்கள்
ஈராறுடனேமயின்மீதிலிளஞ்செங்கதிர்போல்வீற்றிருந்து
நேராய்விளங்கியடியர்தொழுமினைத்தவரங்களளித்தருளும்
ஏரார்காராமணிநகரிலிலங்குமுருகப்பெருமானே. க

சுடர்மாமணிசேர்திருமுடியுந்துலங்குவயிரத்தோளணியும்
படர்மார்பிலங்குகதிர்மணிசெய்பதக்கம்பருமாமணியாரம்

அடர்செஞ்சதங்கைத்திருத்தாளுமரியபீதாம்பரவுடையும்
நடமார்காராமணிநகரிற்றழைழுமுருகப்பெருமானே. உ

பதுமத்திருமாவதனமொளிர்பவளக்கொடியும்பசுங்கொடியும்
மதுவைப்பொழியுமலர்மாலைமணியாபரணமுழுதணிந்து
மதியைக்குளிரச்செயுங்கலைகள்வயங்கவிரண்டுமெருங்கமர்ந்து
புதுமைக்காராமணிநகரிற்புகழார்முருகப்பெருமானே. ௩

சேவற்கொடியுங்கதிர்வேலுஞ்சிறந்துவயங்கவிருபுறமும்
காவற்பூதப்படையுடனேகைவேலணிந்தநவவீரர்
தேவர்முனிவரிருடியர்கள்செறிந்துபோற்றமயின்மீது
மாவண்காராமணிநகரில்வயங்குமுருகப்பெருமானே. ௪

அன்பருள்ளக்கமலத்திலகலாதமர்ந்துசதாகாலம்
இன்பக்கருணைபொழியமுதமிலங்கானந்தப்பெருங்கடலே
முன்பெற்றுளமாதவத்தாலேமுறையேபோற்றவருள்செய்வாய்
மன்பொற்காராமணிநகரில்வயங்குமுருகப்பெருமானே. ரு

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

வல்லத்திருப்பதி

# சடைட்பீசர் தேவாரப்பதிகம்.

விநாயகர் துதி.

சீர்மருவுவல்லத்திருப்பதிவாழைங்கரனார்
ஏர்மருவுபொற்றுளிறைஞ்சியே—நார்மருவும்
நற்றேவாரப்பதிகநாம்போற்றிசெய்தருளைப்
பெற்றுலகில்வாழ்வாம்பெரிது.

# சடையீசர் தேவாரப்பதிகம்.

கார்மாரிபொழிவளமுங்கால்வாயினெடுவளமும்
ஏருருசிலவளமுமிணையில்பலபயிர்வளமும்
ஊர்வளமுங்குடிவளமுமூலவாதபொருள்வளமும்
சார்வல்லத்திருப்பதிவாழ்சடையீசரடிபோற்றி. ௧

செங்நெலார்வளமல்குசெழும்பழனத்துறைவாய்ந்து
கன்னல்கமுகெழிலோங்கக்கமலமலர்த்தடஞ்சூழ
மன்னியவானெடிதோங்குமணித்திருக்கோபுரத்தமர்ந்த
தன்னிடமார்ஜெயஞம்பாள்சடையீசரடிபோற்றி ௨

முத்துமணியலைவாரிமோதுகரையேரிகளும்
தத்துபணிலங்கள்செறிதடம்புடைசூழ்சோலைகளும்
நத்திவரும்பலபரவைநாதமுயர்கீதமொடு
சத்திவல்லப்பதியமருஞ்சடையீசரடிபோற்றி ௩

தும்புருநாரதர்யாழிற்றொடுத்தரியநெடும்புகழை
உம்பர்மனங்களிதுளங்கவோயாதின்னிசைபாட
அம்பரத்திலலர்மாரியகலாதுமணம்வீச
இம்பர்வல்லப்பதியமருமெழிற்சடையரடிபோற்றி ௪

பத்திமிகுந்தொண்டர்குழாம்பலபாடற்றுதிசெய்ய
சித்தமலரடிவைத்துச்செகமுழுதும்பணிந்தேத்த
வைத்தபெருங்கருணையினல்வாழ்வித்துச்சுகமளிக்கும்
சத்திஜெயஞம்பிகைபாற்சடையீசரடிபோற்றி ௫

கஜாசுரனைத்தடிந்தருளுங்கணபதியாரொருபாலும்
அஜாடலுகந்தமரர்சிறையகற்றியவேளொருபாலும்
நிஜானந்தம்பெறுமுனிவர்விமலசிவகணஞ்சூழத்
துவிஜாருறைவல்லத்தமருஞ்சூழ்சடையரடிபோற்றி ௬

மலரயனுமன்னமதாய்வான்பறந்துமுடிதேட
நிலமேவியேனமதாய்நெடுமாலுமடிதேட
பலகாலுமுழன்றிளைத்துப்பரிந்துதொழப்பேரருளால்
தலமேல்வல்லத்தமர்ந்தசடையீசரடிபோற்றி. ௭

மழவிடைமேலெழுந்தருளிவான்பணியவுலகேத்த
இழைமருங்குற்ஜெயனும்பாளிடத்தமருந்திருக்கோலம்
தொழுவரியதவஞ்செய்தோஞ்சுகமடையவினிதருள்வார்
செழியதிருவல்லத்திற்றிருச்சடையரடிபோற்றி. ௮

திங்களணிமணிமுடியிற்செறிகங்கையலைவீச
பொங்குமழுமான்கரத்திற்பொலிந்திருபாலசைந்தாட
தங்குமிருகரமபயவரதமொடுதாண்டவஞ்செய்
எங்கள்வல்லத்திருப்பதிவாழெழிற்சடையரடிபோற்றி. ௯

தென்பாற்றிசைநோக்கித்தில்லைச்சிற்றம்பலத்தில்
அன்பாற்றொழுமடியணைந்தொழிலின்றிறங்காண
இன்பாடல்செய்தங்கிருஞ்சனகாதியர்க்கருளி
முன்பார்வல்லந்தமருமுதிர்சடையரருள்போற்றி. ௰

சடையீசர் தேவாரப்பதிகமுற்றிற்று.

